REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு



**உடைமை**

உடைமைகள் எல்லாம் பொதுவாக ஆக்கப்பட வேண்டும். அதாவது பொதுவுடைமை ஆக்கவேண்டும்.

— தந்தை பெரியார்

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**பக்குவம்**

ஆழ் கடல் கொந்தளித்துக் கொண்டு தானிருக்கிறது. பக்குவமாகக் கடக்க வேண்டுமானால் நல்ல நாவாயின்- கப்பலின் மூலமாகக் கடக்க வேண்டும்.

— பேரறிஞர் அண்ணா



● மலர்: 3 (●) சென்னை 8—2—1979 வியாழன் (★)❋●❋(★) வெளியூர் 9—2—1979 வெள்ளி (●) இதழ்: 112 ●

## அமைச்சரவை கூட்டம்

சென்னை, பிப். 8- தமிழக அமைச்சரவைக் கூட்டம் முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் தலைமைச் செயலகத்தில் இன்று நடந்தது.

அமைச்சர்களும், அரசு தலைமைச் செயலாளர் வி. கார்த்திகேயனும் கலந்து கொண்டனர்.

## ❋கார்க்கி உடல் நலம்: கே.ஏ.கே. விசாரித்தார்

மதுரை, பிப், 8 உடல் நலம் சரியாக இல்லாமையால் மதுரையில் சிகிச்சைப் பெற்று வரும் அண்ணா நாளிதழ் செய்தி ஆசிரியர் கார்க்கியை கூட்டுறவுத் துறை அமைச்சர் கே. ஏ. கே. சந்தித்து உடல் நலம் விசாரித்தார்.

# சென்னையில் புதிய விளையாட்டு அரங்கம்

## முதல்வர் புரட்சித்தலைவர் அறிவிப்பு



சேலம் அரசினர் பொறியியற் கல்லூரியில் விண்ணரங்கத்தினை முதல்வர் புரட்சித்தலைவர் திறந்து வைத்தார்.

சென்னை, பிப், 8- உடல்வலிவு, உள்ளத் தூய்மை, சமத்துவ பண்பாடு, எல்லோருக்கும் சம வாய்ப்பு கிடைக்கின்ற பாங்கு இவற்றிற்கே தமிழக அரசு முதலிடம் அளித்து வருகிறது என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார். சென்னையில் விளையாட்டு மண்டபம் அமைக்கப்படும் என்று முதல்வர் தெரிவித்தார்.

சென்னையில் நாளை (வெள்ளி) தொடங்கஇருக்கும் இந்திய-ஆஸ்திரேலியா டேவிஸ்கப் விளையாட்டுப் போட்டியில் யார் யார் முதலில் விளையாடுவது என்பதற்கான திருவுளச் சீட்டு எடுக்கும் நிகழ்ச்சி இன்று சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெற்றது.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் திருவுளச் சீட்டுக்களை எடுத்தார் இதில் ஆஸ்திரேலிய டென்னிஸ் வீரர் ராஷ்கேசும் இந்திய வீரர் சஷ்மேனனும் விளையாடுபவர்கள் திருவுளச்சீட்டு நிகழ்ச்சிக்குப்பிறகு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் இந்நிகழ்ச்சியில் பேசுகையில் கூறியதாவது:-

இந்த விளையாட்டில் யார்யார் முதலில் விளையாடுவது என்று நிர்ணயிக்கும் வாய்ப்பை எனக்கு அளித்ததற்காக நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

வெற்றிதோல்வி என்பது நிலையானது அல்ல திறமையும் சந்தர்ப்பத்தையும் சமயோசிதமாக பயன்படுத்துகிறவர்கள் வெற்றி பெறுவார்கள்.

உயர்ந்ததிறமைஅதைவிட கொஞ்சம் திறமை பெற்றவர்கள் என்று தேர்ந்தெடுத்து போட்டியிடச் செய்தால் யார் வெற்றி பெறுவார்கள் என்பதைச்சொல்லிவிட முடியும்.

இந்தக் குழுவில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள ஒவ்வொருவரும் யாரும் சளைத்தவரல்ல என்றும் சமயோசித புத்தியுடன் நடந்துகொள்கிறவர்களையே தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

எனது அண்ணனாகக் கருதுகின்ற சி. எஸ், (சி. சுப்ரமணியம்) சுடன் இந்த நிகழ்ச்சிக்கு முன்பு நான் அவருடன் பேசிக்கொண்டிருந்தபோது விளையாட்டு மண்டபம் (Indoor Auditorium) கட்டுவது பற்றி பேசிக்கொண்டிருந்ததை இங்கே அவர் குறிப்பிட்டுச் சொன்னதற்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

அதற்காக இடத்தை விலைக்கு வாங்கச் செய்திருக்கிறேன், என்பதைக் குறிப்பிட்டார். அதற்கான யோசனையை கூறினாலும் வரவேற்கிறேன்.

தமிழகஅரசைபொறுத்த உடல்வலிவு, உள்ளத் தூய்மை, சமத்துவப் பண்பாடு, எல்லோருக்கும் சம வாய்ப்புகளை உண்டாக்கித் தருவது ஆகியவற்றிற்கு முதலிடம் அளிக்கிறது.

தொடக்க காலத்தில் இந்த விளையாட்டு ஹைதராபாத்தை சேர்ந்த முஸ்லிம்நண்பர் விளையாடி எல்லோரும் பாராட்டக் கூடிய அளவில் இருந்தார். அதன் பிறகு ராமநாதன், கிருஷ்ணன், விஜய்ஆனந்த் சகோதரர் ஆகியோர் இதில் சிறப்புபெற்று விளங்குகிறார்கள்.

அவர்கள் விளையாடி மற்றவர்களுக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்துகிறார்கள்.

தமிழகத்திலே இருக்கின்ற உங்களைப் போன்றவர் இதுபோன்ற விளையாட்டுக்களில்ஈடுபடுகிறவர்களுக்கு ஆதரவு அளிப்பது ஆர்வத்தை தூண்டி வரும் என்பதை நான் அறிவேன்.

திறமை, சமயோசித புத்தியை யார் பயன்படுத்துகிறார்களோ அவர்கள் வெற்றி பெறுவார்கள் என்பதை என்னுடைய வாழ்த்தாக தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர்புரட்சித் தலைவர் பேசினார்.

### சி. எஸ்.

அகில இந்திய டென்னிஸ் விளையாட்டு சங்கத்தின் தலைவரும், முன்னாள் அமைச்சருமான சி. சுப்ரமணியம் இந்த விழாவில் பேசுகையில், ''இதுபோன்றபோட்டிகள்

(2ம் பக்கம் பார்க்க)

## சென்னைக்கு அடுத்தபடியாக

# சேலத்தில் ரூ. 6 லட்சம் செலவில் இதய நோய் சிகிச்சைப்பிரிவு

## முதல்வர் தொடங்கி வைத்தார்

சேலம், பிப், 8- கிராமப்புற மக்கள் மருத்துவ வசதி பெறும் வகையில் சேலத்தில் இதய நோய் சிகிச்சைப் பிரிவு ஒன்றை முதல்வர் புரட்சித்தலைவர் துவக்கி வைத்தார்.

கிராமப்புற மக்கள் மருத்துவ வசதியை பெறுவதற்காக கழக அரசு செயல்பட்டு வருகிறது. அதன் அடிப்படையில் சேலத்தில் இதயநோய் சிகிச்சை பிரிவு ஒன்றை முதல்வர் புரட்சித்தலைவர் துவக்கி வைத்தார்.

இதய நோய்க்கு சிகிச்சை பெறுவதற்கான வசதிகள் தமிழகத்தில் சென்னையில் மட்டும் தான் உள்ளது. அடுத்து இப்போது சேலத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

சேலத்தில் ரூபாய் 6 லட்சம் செலவில் அமைக்கப்பட்டுள்ள இந்தப் பிரிவுக்கு இதயத் துடிப்பை பதிவு செய்யும் கருவியை ரூபாய் ஒன்றரை லட்சம் செலவில் வாங்குவதற்கு முதல்வர் புரட்சித்தலைவர் அனுமதி வழங்கியுள்ளார் என்று அமைச்சர் சவுந்தரராசன் தெரிவித்தார்.

ரயில்வே செஸ் நிதியிலிருந்து சேலத்தில் இந்தப் பிரிவு அமைக்கப்படுவதற்கு 6 லட்சம் ரூபாய் அளித்துள்ளது.

இதய நோய் சிகிச்சை பிரிவுக்காக கட்டடம் அமைக்க 2 லட்சம் ரூபாயும் கருவிகள் வாங்க இரண்டரை லட்சம் ரூபாயும் செலவிடப் பட்டுள்ளது.

4 படுக்கைகள் மற்றும் குளிர்சாதன அமைப்புகள் பொருத்தப்பட்டு அனைத்து வசதிகளுடன் இந்த மருத்துவப் பிரிவு அமைக்கப்பட்டுள்ளது.

### திருச்சியில்...

விரைவில் திருச்சியிலும் இதயநோய் சிகிச்சைப் பிரிவு ஒன்று துவக்கப்படும் என்றும் அமைச்சர் சவுந்தரராசன் தெரிவித்தார்.

சேலம் வந்த முதல்வர் புரட்சித்தலைவரை அமைச்சர் சவுந்தரராசன் வரவேற்றார். விழாவில் அமைச்சர்களும் கலந்துக் கொண்டனர்.

## இன்று மாலை

சென்னை

**கலைவாணர் அரங்கில்**

குழந்தைகள் திரைப்பட விழா

# புரட்சித் தலைவர் பேசுகிறார்

# சுயநல சூழ்ச்சிக்கு ஏழை விவசாயிகளை பலியாக்கும் நிலப்பிரபுக்கள் சூழ்ச்சி-சதியை

# அரசு அனுமதியாது

## புரட்சித்தலைவர் இறுதி எச்சரிக்கை

திண்டுக்கல், பிப் 8 பணக்கார விவசாயிகள் தங்கள் சுயநலத்திற்காக ஏழை விவசாயிகளை பயன்படுத்தும் நிலை நீடிக்க தமிழக அரசு அனுமதிக்காது என்று முதல்வர் புரட்சித்தலைவர் எச்சரித்தார்.

மொழிப் பிரச்சினையில நாம் ஒன்றுபட்டு இருப்பது போல விவசாயிகள் பிரச்சினை, தொழிலாளர் பிரச்சினை ஆகியவற்றிலும் ஒன்றுபட்டு செயலாற்றவேண்டும் என்றும் முதல்வர் கூறினார்

வாடிப்பட்டியில் நடந்த பாலகுரு இல்லத் திருமண விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் தலைமை வகித்துப் பேசினார்.

சில ஆண்டுகட்கு முன்பு தான் பாலகுருவுக்கும் எனக்கும் நட்புஏற்பட்டது.

அந்த நட்பு ஆழமாக ஆலமரம் போல வளர்ந்துள்ளது. குடும்ப பாசத்துடன் அண்ணன் தம்பி போல பழகி வருகிறோம்.

இந்த திருமணம் என் தம்பி குழந்தைகளின் திருமணம் என்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது.

இது பெற்றவர்கள் நிச்சயித்து நடக்கும் திருமணங்கள் ஆகும்.

இங்கே ஒரு கலப்புத் திருமணமும் நடந்துள்ளது. இருவரும் ஒரே இடத்தில் பணியாற்றுபவர்கள்.

அவர்களுடைய பெற்றோர்களின் அனுமதி பெற்று நடந்துள்ளது.

நம்மில் தாழ்ந்தவர் உயர்ந்தவர் என்று நினைக்கக்கூடாது நாம ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற அண்ணாவின் கொள்கைப்படி நடப்பவர்கள்.

### எட்மண்ட் இதயம வலப்பக்கம்

இங்கே பேசிய உ சுப்பிரமணியம் மணப்பெண்கள் இடப்பக்கம் உட்காரவைக்கப்பட வேண்டும் என்று கூறினார்.

சிவனுக்கு இடப்பக்கம் பார்வதி இருப்பதாகச் சொல்லுவார்கள். சிவன் தன் இதயத்தில் பார்வதியை வைத்திருப்பதைக் குறிக்கும் விதத்தில் இடப்பக்கம் பார்வதி என்பார்கள்.

மனிதர்களுக்கு இதயம் இடப்பக்கம் இருப்பது வழக்கம். ஆனால் சிலருக்கு வலப்பக்கம் இருக்கும். இது சாதாரண மக்களுக்குத் தெரியாது. சிலருக்கு அப்படி இருக்கிறது.

அமைச்சர் எட்மண்டுக்கு இதயம் வலப்பக்கம் இருக்கிறது. இயற்கை மாறுபட்டு இருக்கிறது. ஆனால் இதனால் ஆபத்து இல்லை,

ஆகவே இதயம் வலப்பக்கம் இருப்பவர்களின் திருமணத்தின் போது மணப்பெண்ணை வலப்பக்கம் உட்கார வைக்கலாம் என்று சொல்ல முடியும்.

### இதயம் அற்றவர்கள்

இதயமே இல்லாதவர்களைப் பற்றி யோசிக்க வேண்டும். இரக்கம் உள்ள மனிதர்களுக்கு இதயம் இருக்கும்,

'அய்யோ பாவம்' என்று நினைப்பது இரக்கமாகும், அப்படி இரக்கக் குணம் உள்ளவன் மனிதனாகிறான்.

பாலகுருவைப்பாராட்டுகிறேன் அவருடைய இல்லத் திருமணத்தில் யாரோ கலப்புத்திருமணம் செய்து கொள்வதை மகிழ்ச்சியுடன் ஏற்று நடத்தியுள்ளார்.

இப்படிப்பட்ட எண்ணம் மனிதர்களுக்கு வளர வேண்டும். அந்த வளர்ச்சி எதிர் காலத்திற்கு ஆக்கம் தரும்.

பதவிக்கு வருபவர்கள் மற்றவர்களின் புகழைப் பெறும் வகையில் கடமைகளை செய்ய வேண்டும்.

### அண்ணா ஆட்சி

அறிஞர் அண்ணா அவர்கள் இரண்டுஆண்டு காலம் தான் முதல்வராக இருந்தார்.

ஆனால் அண்ணாவின் ஆட்சிபோல இனி ஒருவர் ஆட்சியை காண முடியாது என்றபெருமையைப்பெற்று விட்டார்.

அதற்கு முன்பு ஓ. பி. ராமசாமி ரெட்டியார் முதல்வராக இருந்தார்,

தமிழ்ப்பற்றோடு- லஞ்ச ஊழல் இல்லாமல்- யாருக்கும் சலுகை தராமல்- தன் குடும்பத்திற்கு என்று சொத்து சேர்க்காமல்நல்ல முறையில் ஆட்சி நடத்தினார்.

இப்படிப்பட்ட நிலைமைகள் நாட்டில் வளரவேண்டும்,

இதற்காகவே காந்தி அடிகள், அய்யா, அண்ணா முதலியவர்கள் பாடுபட்டனர்.

புகழைக் கஷ்டப்பட்டு பெறவேண்டும். புகழைத்

(2-ம்பக்கம் பார்க்க)

## சட்டசபை கூடுகிறது கவர்னர் உரை

சென்னை, பிப். 8-தமிழ்நாடு சட்டசபை,மேலவை ஆகியவற்றின் கூட்டுக்கூட்டம் நாளை (வெள்ளிக்கிழமை) பகல் 11 மணிக்கு கூடுகிறது.

ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி உரைநிகழ்த்துகிறார்.

## கல்லக்குடியில் நாவலர் நாளை பேசுகிறார்

சென்னை' பிப். 8- நாளை (9-ந் தேதி) மாலை 6 மணிக்கு கல்லக்குடி எம் ஜி ஆர் மன்றத்திடலில் கழகப் பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் பேசுகிறார்.

கூட்டத்திற்கு கே. பாப்பு தலைமை வகிக்கிறார் சவுந்தரராசன்எம்.எல் ஏ. சண்முகம் எம். எல். ஏ. இரா. ஜெயபாலன், புருசோத்தமன், பிச்சை, அமல்ராஜ், காதர் ஒளி, மார்க்கசகாயம் மற்றும் பலர் பேசுகின்றனர்.



சேலம் மேக்னசைட் நிறுவனத்தை அரசு ஏற்றதன் தொடக்க விழாவை முதல்வர் புரட்சித்தலைவர் நடத்தி வைத்தார்.

# பாகிஸ்தான் மந்திரிசபை அவசரமாக கூடியது: பூட்டோவின் தூக்குத் தண்டனை ரத்தாகுமா?

ராவல்பிண்டி. பிப். 8- பூட்டோவுக்கு தூக்கு தண்டனை உறுதி செய்யப்பட்டதைத் தொடர்ந்து பாகிஸ்தானில் சியால்கட் குஜரான்வாலா ஆகிய இடங்களில் வன்முறைச் சம்பவங்கள் ஊர்வலங்கள் நடந்தன,

தடை உத்தரவினை மீறி ஊர்வலங்களை நடத்திய ஆர்ப்பாட்டக்காரர்கள் 30 ராணுவ வாகனங்களை நாசப்படுத்தினார்கள். அரசு கட்டிடங்களுக்குத் தீ வைத்தனர். பல இடங்களில் ராணுவத்தினருக்கும் கலவரக்காரர்களுக்கும் இடையே பல மோதல் ஏற்பட்டன.

பாகிஸ்தானில் வன்முறைச் சம்பவங்கள் நடைபெறுவதையொட்டி விவாதிக்க பாகிஸ்தான் மந்திரிசபை அவசரஅவசரமாக கூடியது.

இந்தக் கூட்டத்தில் என்னென்ன விஷயங்கள் விவாதிக்கப்பட்டன என்பது பற்றி அறிவிக்கப்படவில்லை.

பூட்டோவுக்குக் கருணை காட்டும்படி பாகிஸ்தான் அதிபர் ஜியாவுல்ஹக்கை ஜெயப்பிரகாசர் கேட்டுக் கொண்டார். அரசியல் வழக்குகளில் மரண தண்டனை என்ற ஆயுதத்தினை பயன்படுத்தும்போது அது மனித நாகரீகத்துக்கு அபாயமானது என்று ஜெயப்பிரகாசர் கூறியிருக்கிறார் பூட்டோவைத் தூக்கிலிட வேண்டாம் என்று அமெரிக்க ஜனாதிபதிகார்ட்டர்கேட்டுக் கொண்டிருக்கிறார்.

# புரட்சித் தலைவர் எச்சரிக்கை

(முதல் பக்கத் தொடர்ச்சி)

தேடி நாம ஓடக்கூடாது மனிதரைத்தேடி புகழ் வர வேண்டும்.

இதற்கு இரக்கம், தாயுள்ளம், அன்பு இருக்க வேண்டும்-

## பெருநிலப் பிரபுக்களுக்கு எச்சரிக்கை

விவசாயிகள் பிரச்சினை களைப்பற்றி இங்கே நான் பேசவிரும்பவில்லை. ஆனால் பக்கத்தில் அவர்கள் கூட்டம் போடுகிறார்கள் என்றார்கள்.

அவர்கள் என்னென்ன செய்கிறார்கள் என்பது எல்லாம் தெரியும்.

பெரிய நிலப் பிரபுக்கள் ஏழை விவசாயிகளை தங்கள் சுயநலனுக்காக பயன் படுத்தும் நிலை நீடிக்க தமிழக அரசு அனுமதிக்காது.

அரசு கடனைத் தராதே என்கிறார்கள். இது எப்படி சரியாகும்?

நாளை தருகிறேன். சில நாள் கழித்து தருகிறேன். கொஞ்சநாள் தள்ளி வையுங்கள் என்று கேட்கலாம்.

வரியை-கடனைத் தராதே என்று சொல்பவர்களையும் விட்டு வைத்திருப்பது ஏன் என்று கேட்கலாம்.

நாட்டில் என்ன நடக்கிறது என்பதை அவர்கள் தெரிந்து கொள்வார்கள் நான் அமைதியாக இருக்கக் காரணம் அவர்களும் நமது உடன் பிறப்புகள் என்பதால் தான்.

தேர்தல் காலத்தில் விவசாயிகளுக்கு என்ன என்ன செய்வோம் என்று சொன்னோமோ அதை நிறைவேற்றுவது எங்கள் கடமை, இதையெல்லாம் நிறைவேற்ற நிதிநிலை அறிக்கையில் காண முடியும்.

சிறுவிவசாயிகள் கஷ்டப்படுமாறு விட மாட்டோம் அவர்கள் பணக்காரர்கள் பின்னால் போவார்களா? அதையும் பார்ப்போம். நிச்சயம் மாறுவார்கள்.

மக்களைக் கஷ்டப்படுத்தி யாரையும் சிறையில் வைப்பது தண்டிப்பது. அரசுக்கு எண்ணம் அல்ல சட்டத்தின் உதவியோடு மாற்றியாகவேண்டும்.

ஆட்சிமொழி இந்தி என்பதை ஏற்கமாட்டோம் என்று நாவலர் இங்கே கூறினார்.

மொழிப் பிரச்சினையில் நாம் ஒன்றுபட்டு இருப்பது போல தொழிலாளர் பிரச்சினையில் விவசாயிகள பிரச்சினையில் ஒன்றுபட்டு செயல்பட வேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

## நாவலர் பேச்சு

பாலகுரு இல்லத் திருமணத்தில் கழகப் பொதுச் செயலாளர் டாக்டர் பேசியதாவது:

இப்படிப்பட்ட சுயமரியாதைத் திருமணங்கள் மூலம் பெரியாரின் கனவு நனவாகி வருகிறது.

நமது பண்பாட்டை நாகரீகத்தைக் கலையை வளர்த்த மொழி தமிழ் ஆகும்.

ஆனால் அந்த மொழி மத்திய ஆட்சி மொழியாக ஆகவில்லை, கோவில்களில் இல்லை. சங்கீதத்தில் இல்லை ரயில் நிலையம், அஞ்சல் நிலையத்தில் இல்லை.

தாய்மொழி தமிழை வளர்க்க-தமிழில் எல்லாம் நடக்கவேண்டும் என்று அண்ணா பாடுபட்டார்.

பெரியார் சிந்தித்தார். அண்ணா செயலாக்கம் தந்தார். அண்ணா விட்டுச் சென்ற இடத்தில் இருந்து புரட்சித்தலைவர் செயலாற்றி வருகிறார்.

அண்ணாவின் கனவை நனவாக்க நேர்மையோடு, நாணயத்தோடு, கறைபடியாத கரத்தோடு புரட்சித் தலைவர் ஆட்சி நடத்துகிறார்.

கால் செருப்பை சுழி விடத்தில் யாராவது கள் ளினால் கூட நாம் கடும் சினம் கொள்கின்றோம்.

செருப்புக்கே சினம் வருகிறபோது நாம் போற்றும் திருமண வீட்டில் தமிழ் இல்லை, கோயிலில் இல்லை. மத்தியில் ஆட்சி மொழியாக இல்லை என்று நினைக்கும் போது எவ்வளவு ஆத்திரம் வரும்? எங்கும் தமிழ் மணம் கமழ வைப்பது நமது பொறுப்பு.

இவ்வாறு டாக்டர் நாவலர் பேசினார்.



# தனியார் துறை பஸ் தொழிலாளர்களுக்கு சம்பள உயர்வு

அரசு அறிவிப்பு

சென்னை, பிப். 8- தனியார் நிறுவனங்களைச் சேர்ந்த பஸ் ஊழியர்களுக்கும் சம்பள உயர்வு தரும்படி தமிழ்நாடு அரசு உத்தரவிட்டுள்ளது

அடிப்படை ஊதியமும், அகவிலைப்படியும் உட்பட தொழிலாளர்களின் ஊதியம் மாதம் 130 ரூபாய் முதல் 300 ரூபாய் வரை தொழிலாளர் வகைகளுக்குத் தகுந்தவாறு மாற்றியமைக்கப்பட்டுள்ளது.

மோட்டார் போக்குவரத்துத் தொழிலில் அமர்த்தப்பட்டுள்ள மொத்தம் 64 வகைத் தொழிலாளர்களுக்கு குறைந்த அளவு ஊதியம் மாற்றியமைக்கப்பட்டுள்ளது

## சம்பள விகிதம்

சில வகைத் தொழிலாளர்களின் திருத்தப்பட்ட குறைந்த அளவு ஊதியம் பின்வருமாறு:

| | ஊதியம் ரூ. | படி ரூ. | மொத்தம் ரூ. |
|---|---|---|---|
| ஓட்டுநர் | 150 | 100 | 250 |
| நடத்துனர் | 125 | 75 | 200 |
| ஆய்வாளர் | 130 | 100 | 230 |
| மெக்கானிக் | 200 | 100 | 300 |
| மெஷினிஸ்ட் | 150 | 100 | 250 |
| மின்பணியாளர் | 150 | 100 | 250 |
| சூபர்வைசர் | 200 | 100 | 300 |
| எழுத்தர் | 150 | 100 | 250 |
| தட்டச்சர் (அ) | 200 | 100 | 300 |
| தட்டச்சர் (ஆ) | 175 | 100 | 275 |
| காசாளர் | 175 | 100 | 275 |
| கடைநிலை ஊழியர். காவலாள், கூலியாள் | 55 | 75 | 130 |

இப்பொழுது நிர்ணயிக்கப்பட்டுள்ள அகவிலைப்படி சென்னை நகர நுகர்வோர் விலைவாசிப் புள்ளி 325 உடன் (1960 100 அடிப்படையில்) இணைக்கப்பட்டுள்ளது.

325 லிருந்து ஒவ்வொரு புள்ளி ஏற்றம் அல்லது இறங்கலுக்கு தகுந்தவாறு 75 பைசா வீதம் அகவிலைப்படியில் மாற்றல் செய்ய வேண்டும்.

## அகவிலைப்படி உயருகிறது

அகவிலைப் படியில் மாறுதல் ஆண்டுக்கு ஒருமுறை ஏப்ரல் மாதம் முதல் நாளிலிருந்து செயல்படுத்தப்பட வேண்டும். இம்மாற்றம் மாறுதல் செய்யும் நாளுக்குமுந்தைய ஆண்டு ஜனவரி முதல் டிசம்பர் மாதம் வரையிலான நுகர்வோர் விலைவாசிப்படியில் சராசரியை அடிப்படையாக கொண்டு கணக்கிடப்படும். அகவிலைப் படியில் முதல் மாறுதல் 1979 ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் தேதியிலிருந்து செய்யவேண்டும்.

திருத்தப்பெற்ற குறைந்த அளவு ஊதிய வீதம் நடப்பு ஆண்டு பிப்ரவரி 15ஆம் நாளிலிருந்து செயலுக்கு வரும்.

திருத்தப்பெற்றகுறைந்த அளவு ஊதிய வீதங்களை விட ஏற்கனவே மிகுதியாகப் பெற்றுவரும் தொழிலாளர்களின் நலனை பாதுகாக்க அவர்கள் தொடர்ந்து இதுவரை பெற்றுவந்த ஊதியங்களையே பெற்றுவர வகை செய்யும் அறிக்கை ஒன்றும் வெளியிடப்பெற்றுள்ளது.

தமிழ்நாடு அரசின்கீழ இயங்கும் பயணி போக்குவரத்துக் கழகங்களிலும் பொருள் போக்குவரத்துக் கழகத்திலும் பணிபுரியும் தொழிலாளர்களுக்கு திருத்தப்பட்ட குறைந்த அளவு ஊதிய வீதங்கள் பொருந்தாது.

# முதல்வர் அறிவிப்பு

(முதல்பக்கத் தொடர்ச்சி)

சென்னையில் அதிகம் நடைபெற முடியாத சூழ்நிலை இருக்கிறது. அதற்கு காரணம் செப்டம்பர், அக்டோபர் நவம்பர் மாதங்களில் மழை பெய்வதே ஆகும்.

அதற்காக 'இன்டோர் ஆடிட்டோரியம்'' கட்ட வேண்டும் என்று முதல்வரிடம் கேட்டுக்கொண்டேன், அதற்கு தகுதியான இடத்தை தேர்ந்தெடுக்கும்படி முதல்வர் சொல்லி இருக்கிறார்'' என்றார்.

தமிழ்நாடு டென்னிஸ் விளையாட்டு சங்கத்தலைவர் எம் ஏ எம் ராமசாமி அனைவரையும்வரவேற்றுப் பேசினார்.

விழாவுக்குஇந்தியடென்னிஸ் வீரர்கள், ஆஸ்திரேலிய வீரர்கள், இக்குழுக்களின் தலைவர்கள் ஆகியோர் வந்திருந்தனர்.



## குழந்தைவேலு தலைமையில் திருமணம்

சென்னை, பிப், 8- தமிழக விவசாயத் துறை அமைச்சர் குழந்தைவேலு தலைமையில் கழகத் தோழர் பிச்சைமுத்துவுக்கும் பொப்பூர்வீரையாவின் மகள் கிருஷ்ணவேணிக்கும் திருமணம் நாளை 9ந் தேதி காலை 7-30 மணிக்கு நடைபெறுகிறது.

சென்னை மூலகொத்தளம் பிபி அம்மன் கோவில் தெருவில் எண் 7 என்ற இல்லத்தில் நடைபெறும் திருமணத்திற்கு அமைச்சர் குழந்தைவேலு தலைமை வகிக்கிறார். எஸ். எ. துரைராஜ் எம் எல் ஏ, எம் ஏ ஹக்கீம் ஆகியோர் வாழ்த்துரை வழங்குகிறார்கள்.



# நாதஸ்வர கலைக்கு ஒரு நாமகிரிப்பேட்டை

சேலம் மாவட்டம் நாமகிரிப்பேட்டைக்கு இன்று நாதஸ்வரக் கலையில் முன்னணியில் நிற்கும் ஒரே கலைஞராகப் பரிமளிப்பவர்-கிருஷ்ணன். அருப்புக் கோட்டை கணேசனிடம் பயிற்சி பெற்ற இவரின் மூதாதையர் நாதஸ்வரக் கலையைத் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

சுமார் இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னர் நாதஸ்வரக் கலைஞர்கள் மகாநாடொன்று மறைந்த கலையுலக மேதை இயக்குனர் கே சுப்ரமணியம் தலைமையில் கூட்டப்பட்டது. தொழிலின் குறைபாடுகள், பிரச்சினைகள் பேசப்பட்டன.

தனியாக ஒவ்வொருவருக்கும் பண்ணிசைக்க பதினைந்து நிமிடங்கள் அவகாசம் தந்தார்கள். ரசிகர்கள் முன்னிலையில் நடைபெற்ற இவ்விழாவின் இசைக்கோலங்களை சென்னை வானொலி நிலையம் ஒலிபரப்பியது.

நாமகிரிப்பேட்டைவாசித்த 'கல்யாணி' கைத்தட்டல்களைப் பெற்றது. பிடில் வித்வான் தீவாரம் வெங்கடசாமி நாதஸ்வரக் கலைஞர்களின் வாசிப்பை பாராட்டிப் பேசினார்.

அடுத்து ரேடியோவிலிருந்தும் வாய்ப்புகள் வர ஆரம்பித்தன. திருச்சி நிலையத்தில் ஒலிபரப்பப் பட்ட இவரது நிகழ்ச்சிகள் நாளடைவில் இந்தியாவிலுள்ள எல்லா வானொலிகளை நிலையங்களிலும் ஒலிபரப்பப்பட்டன. படஅதிபர் எம். ஏ. வேணுவின் எல்லாத் திரைப்படங்களிலும் வாசிக்கும் வாய்ப்பும் இவருக்குக் கிடைத்தது.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் ஆத்தூர் விழா ஒன்றில், இவருக்கு 'பெருங்குழல் புலவர்மணி' என்ற பட்டத்தையும் ரிஷிகேஷில் சிவானந்த சரஸ்வதி 'நாதஸ்வர பாரங்கிதா'' என்ற விருதையும் அளித்து இவரைக் கௌரவப் படுத்தினர்கள்.

தந்தை பெரியார் தமது கடைசி பிறந்த நாளன்று பெரியார் திடலில் இவருக்கு 'நாதஸ்வர சக்ரவர்த்தி' என்ற பட்டத்தைத் தந்தது குறிப்பிடத்தக்கது.

தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் இவருக்கு அரசுக் கலைஞர் என்ற மாபெரும் விருதை அளித்து கௌரவித்துள்ளார்.

''த. மு. ரா.''

## ராமகிருஷ்ணன் குழந்தை மறைவு

சென்னை, பிப், 8- நீதியின் குரல் நாளிதழ் நிருபர் ராமகிருஷ்ணனின் குழந்தை ஹேமமாலினி இயற்கை எய்தியது. ஜெப்பியார் உள்பட ஏராளமான கழகத் தோழர்கள் ராமகிருஷ்ணனுக்கு ஆறுதல் கூறினார்கள்.

## மதுரை இளவரசன் நிகழ்ச்சிகள்

பிப் 13 வத்திராயிருப்பு 14, 15 முகவை மாவட்டம், 16, 17 திருச்சி 18 பாபநாசம் 19 தஞ்சை.



## கழகச் செய்திகள்

### ஷெனாய் நகர்

11-2-79 ஞாயிறு மாலை 7 மணிக்கு டி பி சத்திரம் அருகில் வி, வடிவம்பாள் தலைமையில் பேசுவோர்:-

அமைச்சர் சுப்புலட்சுமி ஜெகதீசன், எல்லம்மாள், சரசா. வ. கோதண்டராமன் கோலப்பா, தாமோதரன், அல்போன்ஸ், கிருஷ்ணமூர்த்தி, வக்டர் மற்றும் பலர்

### 91 வது வட்டம்

சென்னை 91-வது வட்டத்தில் சின்ன பொண்ணு தலைமையில் மகளிர் பிரிவினர் சார்பாக கழகக்கொடி ஏற்று விழா நடந்தது. வளர்மதி கழகக் கொடியேற்றினர். ஜெ பாலன், மு.கிருஷ்ணன் இரா. நரசிம்மன். லட்சுமி, மற்றும் பலர் பேசினர்.

மருத்துவ மனையில்

## புதுவை ராமசாமி

பாண்டிச்சேரி பிப், 8 புதுவை மாநில முன்னாள் முதல்வர் எஸ் ராமசாமி உடல்நலமில்லாமல் புதுவை ஜிப்மர் மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டார் ராமசாமி முதுகில் உள்ள பெரியகட்டி இரண்டொரு தினங்களில் அறுவை சிகிச்சை செய்யப்படும்.

புதுவை மாநில கழக அமைப்பாளர் சி. என் பார்த்தசாரதி மருத்துவ மனைக்குச் சென்று ராமசாமியை உடல்நலம் விசாரித்தார்.

# மாநாடு போல நடந்த பாலகுரு இல்லத் திருமணம்

## புரட்சித்தலைவர் நடத்தி வைத்தார்

திண்டுக்கல், பிப். 8-கழக சட்டமன்ற உறுப்பினர் பாலகுரு இல்லத் திருமணத்தை முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று மாலை வாடிப்பட்டியில் நடத்தி வைத்து மணமக்களை வாழ்த்திப் பேசினார்

கழகப் பொதுச்செயலாளர் நாவலர் மற்றும் அமைச்சர்கள் கழகத் தலைவர்களும் மணமக்களை வாழ்த்திப் பேசினார்கள்.

பாலகுரு இல்லத் திருமணம் ஒரு பெரிய மாநாடு போல நடந்தது

வாடிப்பட்டி உயர்நிலைப் பள்ளி மைதானத்தில் நடந்த இந்த விழாவில் லட்சக்கணக்கான மக்கள் கலந்துகொண்டனர்.

பாலகுருவின் மகள் சந்திராவுக்குப் பாண்டுரங்கனுக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் முதலில் திருமணத்தை நடத்தி வைத்தார்.

பிறகு பாலகுருவின் மகன் வெங்கட்ராமனுக்கும் கிருஷ்ணவேணிக்கும் அதன்பிறகு பாலகுருவின் இளைய மகன் ராஜேந்திரனுக்கும் தனலட்சுமிக்கும் திருமணத்தை நடத்தி வைத்தார்.

### நாவலர்

மணவிழாவுக்கு வந்திருந்தவர்களை அமைச்சர் காளிமுத்து வரவேற்றார்.

முதல்வர் புரட்சித் தலைவர், கழகப் பொதுச் செயலாளர் நாவலர், அமைச்சர்கள் கே.ஏ.கே., ராஜாமுகமது, பி டி.எஸ் சுப்புலட்சுமி, ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசினார்கள்.

சிறு சேமிப்பு இயக்க துணைத்தலைவர் எஸ் எஸ். ஆர்., நாடாளுமன்ற உறுப்பினர்கள் அன்பழகன், மாயத்தேவர், சட்டமன்ற உறுப்பினர் உ சுப்பிரமணியம், ஜெபராம. ரெட்டியார் ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசினார்கள்.

### கலப்புத் திருமணம்

அதே மேடையில் கலப்புத் திருமணம் ஒன்றும் நடந்தது. அரிசன வகுப்பைச் சேர்ந்த தங்கவேலுவுக்கும் பிராமண வகுப்பைச் சேர்ந்த சாரதாவுக்கும் திருமணம் நடந்தது.

இந்த திருமணத்தை முதல்வர் நடத்தி வைத்தார்.



# பாதயாத்திரை நடத்துவதா? சிவ. இளங்கோவுக்கு கண்டனம்

சென்னை, பிப். 8 தமிழ்நாடு என்ஜிஓ சங்கத்தின்சார்பில் சிவ இளங்கோ பாதயாத்திரை நடத்த இருப்பதைக் கண்டித்து தமிழ்நாடு அரசு அலுவலர் கழகத்தலைவர் இரா முத்தானந்தம் அறிக்கை விடுத்துள்ளார்.

அதில் முத்தானந்தம் கூறியிருப்பதாவது:-

தமிழக முதல்வர் புரட்சித் தலைவரின் தலைமையில் ஆட்சிப்பொறுப்பினை ஏற்ற ஓராண்டு காலத்திற்குள் அரசு அலுவலர்களுக்கு மூன்றாவது ஊதியக் குழுவின் முடிவுகளை அறிவித்ததின் வாயிலாக ரூ 67 கோடி வரையில் செலவு செய்ய முடிவு செய்யப்பட்டுள்ளது, மேலும் ஊதியக் குழுவின் பரிந்துரைகளின் பேரில் தொடர்ந்து உத்தரவுகள் வந்து கொண்டிருக்கின்றன, இந்த தருணத்தில் அரசு அலுவலர்களுக்கும் - அரசுக்கும் நல்ல உறவை வைத்துக் கொண்டிருக்கும் வேளையில் தேவையற்ற பாதயாத்திரை போன்ற போராட்டங்களை நடத்தி, அரசு அலுவலர்களுக்கு ஒரு அவப்பெயரை உண்டாக்கும் பணியில் சிவ இளங்கோ ஈடுபட்டுள்ளார்.

எனவே சிவ இளங்கோவின் போராட்டத்திற்கு யாரும் ஆதரவு கொடுக்க வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு முத்தானந்தம் கூறியுள்ளார்.



தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை சென்னை 600004. ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

சின்மயா நகர்:

## மினி பஸ் வழித்தடம் மாற்றம்

சென்னை, பிப். 8-சின்மயா நகர் அருகிலுள்ள விருகம்பாக்கம், கோடம்பாக்கம் பகுதியில் இடைப்பட்ட பாலம் கட்டப்படுவதால்மாநகராட்சிகால்வாய் பண்ணை வழியாக தற்போது வடபழனி அரும்பாக்கம் வழியாகசெல்லும் "எம் 2'' என்ற மினிபஸ் இன்று 8-ந் தேதி முதல் பாலம் சீரமைக்கப்படும் வரை சின்மயாநகரிலிருந்து நெற்குன்றம் சாலைமற்றும் பூந்தமல்லி நெடுஞ்சாலை வழியாக திருப்பிவிடப்படுகிறது.

## சீனாவின் போக்கில் மாறுதல் ஏற்படுமா?

இந்தியாவின் அயல்துறை அமைச்சர் ஏ.பி. வாஜ்பாயி கூடிய விரைவில் சீனாவுக்கு விஜயம் செய்யவிருப்பது அந்த நாட்டுடன் சகஜமான நல்லுறவு கொள்ள இந்தியா கொண்டிருக்கும் ஆர்வத்தின் தொடர்ச்சியே யாகும். சீனாவுடன் உறவை சகஜப்படுத்த இந்தியா சில ஆண்டுகளாகவே முயன்று வருவது ஒரு நல்ல அறிகுறி. ஆனால் இந்தியா விஷயத்தில் சீனாவின் தற்போதைய தலைவர்கள் தங்கள் மனப்பான்மையை மாற்றிக் கொண்டுவிட்டார்களா என்ற பிரச்சினை இந்த சந்தர்ப்பத்தில் எழுவது இயற்கை. அத்தகைய மாற்றம் எதுவும் ஏற்பட்டிருப்பதற்கான அறிகுறிகள் இல்லை.

நல்வளர்ச்சிகளை தாராளமாக வாரி வழங்குவதைத் தவிர, சீனத் தலைவர்கள் அதிகமாக ஒன்றும் செய்யவில்லை. இந்தியா-சீனா எல்லைப் பிரச்சினை பற்றி அவர்கள் ஏதும் கூறவில்லை உதாரணமாக, இந்தியப் பிரதேசங்களைச் சீனாவின் பகுதிகளாகக் காட்டும் பூகோளப் படங்களை சீனா வெளியிட்டது அவற்றைத் திருத்துமாறு இந்தியா 1950 முதல் பன்முறை கோரியும் சீனா எதுவும் செய்யவில்லை சீனர்கள் ஆக்கிரமித்துக் கொண்டுள்ள இந்தியப் பகுதிகளிலிருந்து வெளியேறுவது பற்றி அவர்கள் எதுவும் கூறவில்லை இந்தியாவின் வடகிழக்கு எல்லையில், இந்தியாவுக்கு எதிரான மிஜோக்களுக்கும், நாகர்களுக்கும் அவர்கள் தொடர்ந்து பயிற்சி அளித்து வருகின்றனர். சிக்கிம் மக்களிடையே இந்தியாவுக்கு எதிரான உணர்ச்சியை அவர்கள் தூண்டி விடுகின்றனர்; இந்தியாவுக்கும், பூட்டான், நேபாளம் முதலிய நாடுகளுக்குமிடையே வேற்றுமைகளைக் கிளறிவிட்டு, இமயமலைப் பிரதேசத்தில் பதற்றநிலையை ஏற்படுத்த பீகிங் முயல்கிறது.

காஷ்மீர் விஷயத்தில் சீனாவின் நிலைமையைச் சீனத்தலைவர்கள்சமீபத்தில் தெளிவுபடுத்தினர், சீனத் துணைப் பிரதமர் லி சீன்-நீன் ராவல்பிண்டிக்கு விஜயம் செய்த பொழுது ஜம்மு-காஷ்மீர் மக்களுக்கு சுய நிர்ணய உரிமை பெறுவதற்கான பாகிஸ்தான் முயற்சிகளை சீன மக்களும், அரசும் உறுதியுடன் ஆதரிப்பதாகக் கூறினர். இந்தியாவுடன் பாகிஸ்தான் உறவுகள் அபிவிருத்தியாகாமல் தடுப்பதற்காக பாகிஸ்தானுடன் சீனா கூடிக் குலாவுகிறது. தவிர இந்தியாவுக்கு எதிரான தன் அரசியல் சூழ்ச்சிகளில் பாகிஸ்தானைசீனா தன்கைப்பாவையாகப் பயன்படுத்த முடியும். இதற்காக அக்ஷாய்சன் மற்றும் காஷ்மீர் வழியே செல்லும் காரகோரம் நெடுஞ்சாலை அமைக்கப்பட்டது.

வாஜ்பாயி விஜயத்தின் போது இந்தகேள்விகளுக்கு பதில் கிடைக்குமானால் அவருடைய விஜயம் உண்மையிலேயேபயனுள்ளதாக ஆகும்.

பி. என். எஸ். ராஜன்

## சரண்சிங் முயற்சி பலிக்கவில்லை

# உ.பி. முதல்வர் நீடிப்பாரா?

## நம்பிக்கை ஓட்டுப்பெற ஜனதா மேலிடம் தாக்கீது

புதுடெல்லி, பிப். 8-உத்தரப்பிரதேச ஜனதா எம்.எல்.ஏக்களின் கூட்டத்தை பிப். 15ந் தேதி கூட்டி முதல்வர் ராம் நரேஷ்யாதவ் நம்பிக்கைஓட்டுபெறவேண்டும் என்று ஜனதா மேலிடம் கட்டளையிட்டுள்ளது. மத்திய அமைச்சர் மதுதந்தவதே ஜனதா மேலிட பிரதிநிதியாக இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்வார்.

உ.பி முதல்வருக்காக சரண்சிங் வாதாடியது செல்லுபடியாகவில்லை.

உத்தரப்பிரதேச முதல்வர் ராம்நரேஷ் யாதவ், தனது அமைச்சரவையில் உள்ள 2 அமைச்சர்களை பதவி விலகச் சொன்னா.

இதைத் தொடர்ந்து ஜனதா எம்எல்ஏக்கள் இரு கோஷ்டியாகப் பிரிந்தனர். யாதவ் பதவி விலக வேண்டும் என்று போட்டி கோஷ்டியினர் வற்புறுத்தினார்கள்,

யாதவ் பெரும்பான்மை ஆதரவை இழந்து விட்டார். அவர் முதல்வராக நீடிப்பது சரியல்ல என்று ஆளுநரிடம் அவர்கள் தெரிவித்தனர்.

யாதவுக்கு ஆதரவு திரட்டி, அவரை பதவியில் நீடிக்கச்செய்ய துணை பிரதமர் சரண்சிங் அரும்பாடுபட்டு வந்தார்.

யாதவ் நம்பிக்கை ஓட்டு பெற வேண்டும் என்ற கோரிக்கையை கட்சி மேலிடம் ஏற்காமல் செய்வதற்கான முயற்சிகளை சரண்சிங் மேற்கொண்டிருந்தார்.



### ஆலோசனை

உத்தரப்பிரதேச நிலைமை குறித்து ஆலோசிக்க ஜனதா கட்சியின் மத்திய பார்லிமெண்டரி போர்டு கூட்டம் பிரதமர் மொரார்ஜி தேசாய் வீட்டில் கூடியது.

பிப்ரவரி 15ந்தேதிசட்டசபை ஜனதா கட்சியின் நம்பிக்கை ஓட்டு பெறுமாறு முதல்வர் யாதவுக்குபார்லிமெண்டரி போர்டு உத்தரவு விட்டது.

அப்படி பலப்பரீட்சை பார்க்கும் போது, ரயில்வே அமைச்சர் மதுதந்தவதே கட்சி மேலிடத்தின் பிரதிநிதியாக இருப்பார்.

யாதவுக்கு மெஜாரிட்டி கிடைக்காவிட்டால் புதிய முதல்வரை தேர்ந்தெடுப்பதற்கு தக்க நடைமுறையைப் பின்பற்றுவதற்கும் மதுதந்தவதேக்கு அது அதிகாரம் அளித்தது.

### பீகார் விவகாரம்

பீகார் முதல்வர் கர்ப்பூரி தாகூருக்கு எதிராக எம்.எல்.ஏக்கள் போர்க்கொடி உயர்த்தி இருப்பது பற்றியும் பார்லிமெண்டரி போர்டு ஆலோசித்தது.

நம்பிக்கை ஓட்டுப் பெறுவதோ பெருமல் இருப்பதோ கர்ப்பூரிதாகூரின் விருப்பம். ஆனால் அதில் வற்புறுத் விரும்பவில்லை என்று பார்லிமெண்டரி போர்டு முடிவு எடுத்தது.

## உசிலைமாயன் முயற்சி வெற்றி

மதுரை, பிப். 8-உசிலம்பட்டி ஊராட்சி ஒன்றியத்திற்கு சொந்தமான வாரச் சந்தையில் அரசியல் கட்சிகள்பொதுக் கூட்டங்கள் நடத்த வசதிகள் நிறைந்த கூட்ட மேடை அமைத்துத்தர வேண்டும் என்று உசிலம்பட்டி கோட்ட வளர்ச்சி அதிகாரி, ஒன்றிய ஆணையர் அவர்களிடம் உசிலம்பட்டி தொகுதி அமைப்பாளர் அன்பு கே. சி. மாயன் தலைமையில்கழகத் தோழர்கள் வீரநயினர், கே என் வின்சென்ட் ராமன், வி. சேதுராமன், கோ, ராமநாதன் ஆகியோர் கோரிக்கை மனு கொடுத்தனர். மனுவை பெற்றுக் கொண்ட அதிகாரிகள் உடனடியாக பொதுக் கூட்ட மேடை அமைக்க உறுதி அளித்தனர்.

## திருமணம்

சென்னை, பிப். 8-சென்னை போலீஸ் கமிஷனர் அலுவலகத்தில் இளநிலை உதவியாளராக பணிபுரியும் கே. இதயகாந்தனுக்கும், கோபாலகிருஷ்ணனின் மகள் ரேவதிக்கும்நேற்று (புதன்) காலை 9 மணிக்கு சென்னை செனாய்நகர். லட்சுமி தியேட்டர் தெருவில் குமுதா சந்திரிகா கல்யாண மண்டபத்தில் திருமணம் சிறப்பாகநடந்தது. உறவினர்களும் நண்பர்களும் திரளாக வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

## போக்குவரத்து கழக ஊழியருக்கு மோட்டார் பந்தயப் பயிற்சி

பண்ருட்டி யோசனை

சென்னை, பிப். 8- "போக்குவரத்து ஊழியர்களுக்கு மோட்டார் பந்தய பயிற்சி அளிக்க சென்னை மோட்டார் பந்தய சங்கத்தினர் முன் வர வேண்டும்'' என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் யோசனை தெரிவித்தார்.

சென்னை அருகே சோழவரத்தில் அகில உலக கார மோட்டார சைக்கிள் பந்தயங்கள் நடந்து வருவது தெரிந்ததே. இந்த பந்தயங்களின் பரிசளிப்பு விழா சென்னையில் நடந்தது வெற்றி வீரர்களுக்கு பரிசுகளை வழங்கி அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசியதாவது:

"மோட்டார் பந்தயத்தில் கள்ள டிக்கட்டு விற்பனையை கண்டுபிடித்திருக்கிறார்கள்.

தவறு செய்தவர்கள் மீது போலீசார் நிச்சயம் நடவடிக்கை எடுப்பார்கள் சட்டம் தனது கடமையை செய்யும் என்பதை இங்கு தெரிவித்துக்கொள்கிறேன்.

கொள்ள வகை செய்ய வேண்டும்

அரசு போக்குவரத்துக் கழக ஊழியர்களுக்கும் மோட்டார பந்தய பயிற்சி அளிக்க முன் வந்தால் அதன் மூலம் மோட்டார் பந்தய சங்கமும் உதவி பெறவாய்ப்புஏற்படலாம். பந்தய பயிற்சி பெறுவதன் மூலம் விபத்துக்களைத் தவிர்ப்பது எப்படி என்று சிறந்த முறையில் தெரிந்து கொள்ளவாய்ப்புஏற்படும்.

இவவாறு அமைச்சர் பண்ருட்டி கூறினர்.

மோட்டார்சைக்கிள், கார பந்தயங்களில் வெற்றிப் பெற்ற 64 பேருக்கு பரிசுகள் வழங்கப்பட்டன மோட்டார பந்தய சங்கத்தைச் சேர்ந்த பெல்காப்வாலா சந்தோக், முத்துகிருஷ்ணன் ஆகியோர்பேசினார்கள்.

### ரூ. 50 லட்சம் செலவில் பந்தய மைதானம்

மோட்டார பந்தயம் நடத்துவதற்கு சென்னை அருகே உள்ள ஸ்ரீபெரும்புதூரில் ரூ. 50 லட்சம் செலவில் மோட்டார் பந்தயத்துக்குச் சொந்தமாக நிரந்தரமாக மோட்டார் பந்தய மைதானம் அமைக்கப் போவதாக சங்கத் தலைவ முத்துகிருஷ்ணன் தெரிவித்தார்.

இதற்கான உதவிகளை தமிழக அரசு நிச்சயம் செய்துதரும். எதிர்காலத்தில் நடைபெறும் போட்டிகளில் வெளிநாட்டினர பெரும்ளவாலானோர் கலந்து



## மாநிலங்களவையில்தமிழில்கேள்வி கேட்பேன்: ஈ. ஆர். கிருஷ்ணன் அறிவிப்பு

புதுடெல்லி, பிப். 8-மாநிலங்களவையில்கேள்வி நேரத்தில் தமிழில் பேச வாய்ப்புத் தரவேண்டும் என்று ஈ.ஆர். கிருஷ்ணன் (கழகம்)வேண்டுகோள விடுத்தார். இதுபற்றி மாநிலங்களவை தலைவருக்கு ஈ.ஆர் கிருஷ்ணன் எம்.பி.எழுதிய கடிதம் பின்வருமாறு.

அவையில் உறுப்பினர்களுக்கு அந்தந்த மாநில மொழிகளை உபயோகப்படுத்துவதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஆனால் இந்த சலுகை கேள்வி நேரத்தில் கொடுக்கப்படவில்லை.

உடனடி மொழிபெயர்ப்புக்கு இப்பொழுது நல்ல வசதியிருப்பதால், கேள்வி நேரத்தில் அரசியல்சட்டத்தில் இடம்பெற்ற மாநில மொழிகளையும் உபயோகப்படுத்த யாதொரு தடையும் இருக்கவேண்டியதில்லை. வரும் வரவு செலவுக் கூட்டத் தொடரிலிருந்து நான் கேள்வி நேரத்திலும் தமிழ் மொழியில் தான் பேசப் போகிறேன். உடன் மொழிபெயர்ப்புக்கு வசதியிருப்பதால் இதை வரவேற்பீர்களென்று நம்புகிறேன்.

இவ்வாறு ஈ ஆர் கிருஷ்ணன் கூறியிருக்கிறார்.



## அம்பத்தூர் நகரிய துணைத் தலைவராக கஸ்தூரிபாலன் நியமனம்

சென்னை, பிப். 8-அம்பத்தூர் நகராட்சிநகரியத்தின் துணைத்தலைவராக திருமதி கஸ்தூரி பாலன் நியமிக்கப்பட்டுள்ளார்,

வடசென்னை நாடாளுமன்றத் தொகுதி மகளிர்ப் பிரிவு அமைப்பாளர் திருமதி கஸ்தூரி பாலன்தான் அம்பத்தூர் நகராட்சி நகரியத்தின் முதல் பெண் துணைத்தலைவராக பொறுப்பேற்றுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

ஆனூர் ஜெகதீசன் முன்னிலையில்

## 300 பேர் கழகத்தில் இணைந்தனர்

நன்னிலம், பிப். 8-திருப்புகலூர் பஞ்சாயத்தைச் சேர்ந்த நெய்குண்டத்தில் கருணாநிதி கட்சியிலிருந்து விலகிய 300 பேர் அமைச்சரின் பேரவைச் செயலர் ஆனூர் ஜெகதீசன் முன்னிலையில் தங்களை கழகத்துடன் இணைத்துக் கொண்டனர்.

## ஆர்.வி. சுவாமிநாதன் இந்திரா காங்கிரஸ் தலைவராக நியமனம்

சென்னை, பிப் 8- தமிழ்நாடு இந்திரா காங்கிரசின் புதிய தலைவராக ஆர். வி. சாமிநாதன் எம்.பி நியமிக்கப்பட்டிருக்கிறார்,

தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் கட்சித்தலைவராக இருந்த கருப்பையா மூப்பனார் தன்னுடைய பதவியை ராஜினாமா செய்ததும் அது ஏற்கப்பட்டது தெரிந்ததே.

தமிழ்நாடு இந்திரா காங்கிரசின் புதிய தலைவராக ஆர் வி சாமிநாதன் நியமிக்கப்பட்டிருக்கிறார். இவர் மதுரை நாடாளுமன்ற தொகுதி உறுப்பினர்.

இத்தகவலை அகில இந்திய இந்திரா காங்கிரஸ் பொதுச் செயலாளர் அந்துலே அறிவித்தார். காங்கிரஸ் மேலிட (பார்லிமெண்டரி) போர்டு உறுப்பினர்களை கலந்தாலோசித்த பின்பே நியமனம் செய்யப்பட்டது என்று அந்துலே கூறினர்

### சர்க்கஸ் ஊழியர் திருமணம்

சென்னை, பிப். 8-சென்னை கண்ணப்பர் திடலில் நடக்கும் வீனஸ் சர்க்கஸில் மானேஜராகப் பணிபுரிந்து வருபவர் ஜெயந்திரன் இவருக்கும் இதே சர்க்கஸில் பணிபுரியும் சாவித்திரிக்கும நேற்று காலை சர்க்கஸ் கூடாரத்துக்குள் திருமணம் நடந்தது.

ஊட்டி நாடாளுமன்ற தொகுதி கழக உறுப்பினர் பி, எஸ், ராமலிங்கம் தலைமையில் திருமணம் நடந்தது. திருமணத்துக்குவந்தவர்களை சர்க்கஸ் அதிபர் எஸ். வி. லால் பொது மேலாளர் கோபிநாத் ஆகியோர் வரவேற்றனர்.

### வாழ்க்கைக் குறிப்பு

ஆர் வி சாமிநாதன் 1910ம் ஆண்டு ராமநாதபுரம் மாவட்டம் பாகம்நேரியில் பிறந்தார் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு 4 முறை சிறைசென்றார் தமிழ்நாடு சட்டமன்றத்துக்கு இருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1969 முதல் 71 வரை தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் பதவியை வகித்து வந்தார்.

ஆர் வி. சாமிநாதன் இந்திரா காங்கிரஸ் தலைவராக நியமிக்கப்பட்டதை இந்திரா காங்கிரஸ் பிரமுகர் நெடுமாறன் வரவேற்றிருக்கிறார்.

உளி வீசியதாக கைதானவர்

## கழகத்தோழர் அல்ல: தொகுதி அமைப்பாளர் நீலகண்டன் மறுப்பு

ராதாபுரம், பிப். 8- கருணாநிதி மீது உளி வீசியதாக கைதான செபஸ்தியான் கழகத்தை சேர்ந்தவரல்ல என்று கழக தொகுதி அமைப்பாளர் நீலகண்டன் தெரிவித்துள்ளார்.

கடந்த மாதம் நெல்லை மாவட்டத்தில் சுற்றுப் பயணம்செய்யவந்த கருணாநிதி ராதாபுரம் பகுதிக்கு வந்த போது அவரை கொலை செய்யும் நோக்கோடு உளி வீசியதாக ஒருவர் கைது செய்யப்பட்டது தெரிந்ததே.

கைது செய்யப்பட்ட செபஸ்தியான் என்பவர் அனைத்திந்திய அண்ணா திமு கழகத்தைச் சேர்ந்தவர் அல்ல என்பது குறிப்பிடத்தக்கது; செபஸ்தியான் கழகத் தோழர் என்று சில பத்திரிகைகளில் வெளியாகி இருக்கும் செய்தி பொய்யானது என்று ராதாபுரம்தொகுதி அமைப்பாளர் இரா. நீலகண்டன் தெரிவித்துள்ளார்.

### அரசியல் சாயம் பூசாதீர்

சில தீயசக்திகள் செபஸ்தியான் கழகத்தவர் என்று கூறி இந்த சம்பவத்துக்கு அரசியல் சாயம் பூசப் பார்க்கிறார்கள்,

அனைத்திந்திய அண்ணா திமுவுக்கும் நடைபெற்ற சம்பவத்திற்கும் எந்தவித சம்பந்தமுமில்லை என்றும் இரா. நீலகண்டன் தெரிவித்துள்ளார்.

தலைமைக்கழக அறிவிப்பு: 8-79 6-2-79

## மாவட்ட மாநிலங்களில் சீரமைப்புக் குழு

மாவட்டங்கள் கழக நிருவாகத்தை பொறுத்து பின் கண்டவாறு பிரித்து அமைக்கப்படும். ஒவ்வொரு வளர்ச்சி மாவட்டமும் ஒவ்வொரு தனி மாவட்டமாக கருதப்படும் சென்னை மாநகரம் வடக்கு சென்னை-தெற்கு சென்னைமாவட்டங்களாகவும் மதுரை மாநகரம் மதுரை மாவட்டமாகவும் கருதப்படும்

இந்த மாவட்டங்களிலும் பிற மாநிலங்களிலும் கிளைகளைச் சீர்படுத்துதல், உறுப்பினர் சேர்த்தலை மேற்பார்வையிடுதல், பிணக்குகளையும் சிக்கல்களையும் தீர்த்தல், கொள்கை பரப்புதலை தீவிரப்படுத்துதல், கழக ஆக்கப்பணிகளைக் கவனித்தல், தலைமைக் கழகத்தின் வேண்டுகோள்களையும் - ஆணைகளையும் நிறைவேற்றுதல், போன்ற பணிகளைக் கழக அமைப்புகளின் தேர்தல்கள் முடியும் வரையில், முறைப்படி கண்காணித்து செயற்படுத்துவதற்கு ஐவர் கொண்ட சீரமைப்புக் குழுவை புரட்சித்தலைவர் அவர்களின் பரிந்துரையின் பேரில் அமைக்கத் தலைமைக் கழகம் முயற்சியெடுத்துள்ளது.

மாவட்டங்களிலும்-மாநிலங்களிலும் சீரமைப்புக் குழு அமைப்புக் குறித்த அறிவிப்பைத் தலைமைக்கழகம் புரட்சித் தலைவர் அவர்களைக் கலந்து கொண்டு விரைவில் வெளியிடும்.

புதிதாக அமைக்கப்படும் சீரமைப்புக் குழுக்கள், இப்பொழுது இருந்து வரும் மாவட்டக் கழகங்கள்-நாடாளுமன்றத் தொகுதிக் கழகங்கள் ஆகியவற்றிற்குப் பதிலாகச் செயல்படும்.

சீரமைப்புக்குழு அமைக்கப்பட இருக்கும் மாவட்டங்களும், மாநிலங்களும் வருமாறு.

### மாவட்டங்கள்

1. வடக்குச் சென்னை
2. தெற்குச் சென்னை
3. வடக்கு செங்கற்பட்டு
4. தெற்கு செங்கற்பட்டு
5. வடக்கு தென் ஆர்காடு
6. தெற்கு தென் ஆர்காடு
7. வடக்கு வட ஆர்காடு
8. தெற்கு வட ஆர்காடு
9. வடக்குச் சேலம்
10. தெற்குச் சேலம்
11. தருமபுரி
12. கிழக்குக் கோவை
13. மேற்குக் கோவை
14. நீலகிரி
15. கிழக்குத் தஞ்சை
16. மேற்குத் தஞ்சை
17. வடக்கு திருச்சி
18. தெற்கு திருச்சி
19. புதுக்கோட்டை
20. மதுரை
21. கிழக்கு மதுரை
22. மேற்கு மதுரை
23. கிழக்கு முகவை
24. மேற்கு முகவை
25. வடக்கு நெல்லை
26. தெற்கு நெல்லை
27. கன்னியாகுமரி

### மாநிலங்கள்

1. புதுவை
2. ஆந்திரம்
3. கருநாடகம்
4. கேரளம்
5. மகாராட்டிரம்
6. வங்காளம்
7. டில்லி
8. மத்தியபிரதேசம்
9. அந்தமான்

மேலும் அவ்வப்போது அறிவிக்கப்படும்.

சீரமைப்புக் குழுக்கள் அமைக்கப்படும் காலம் வரையில் இப்போது இருந்து வரும் மாவட்டக் கழகங்களும் மாநில அமைப்புக்களும் நாடாளுமன்றத் தொகுதிக் கழகங்களும் எப்பொழுதும் போல் பணியாற்றி வரும்.

சென்னை
6-2-79

இரா. நெடுஞ்செழியன்,
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்

சந்தா விவரம்

1 வருடச் சந்தா தொகை ரூ. 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்று கொள்ளப்பட மாட்டாது

நிர்வாகி
"அண்ணா"
அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600 014.


# அண்ணா





## முகமது அலி ஓய்வு பெறுகிறார்

ஜோகன்ஸ்பர்க், பிப். 8- உலகக் குத்து சண்டை வீரர் முகமது அலி குத்து சண்டை போட்டிகளிலிருந்து மே மாதம் நிரந்தர ஓய்வு பெறப்போவதாக தெரிவித்துள்ளார் என்று பிரபல குத்து சண்டை வீரர் பாப் ஆரம் தெரிவித்துள்ளார்.

முகமது அலி இதைச் சொன்னாரா என்று நிருபர்கள் பாப் ஆரமை கேட்டனர்.

"முகமது அலி மே மாதம் விருந்து நிகழ்ச்சி ஒன்றை ஏற்பாடு செய்து இருப்பதாகவும், அதில் அவர் ஓய்வு பெறுவது பற்றி தெரிவிப்பார்" என்றும் பாப் ஆரம் சொன்னார்.

# பேரூர் - சிற்றூர்களில் ஆருயிர் அண்ணனுக்கு கழகத் தம்பியர் அஞ்சலி

**சென்னை, பிப். 8 ஆளாக்கிய பேரறிஞர் அண்ணாவுக்கு அவர் தம் உண்மைத் தம்பியர்களான கழகத் தோழர்கள் நாடுமுழுவதிலும் அஞ்சலி செலுத்தினர்கள்**

திருவண்ணாமலையில் நகர அமைப்பாளர் எஸ். கண்ணன் தலைமையிலும் சி. வேடியப்பன் முன்னிலையிலும் அண்ணா நினைவு நாள் அமைதி ஊர்வலம் நடந்தது. தொகுதி அமைப்பாளர் கே. ஆர். வெங்கடேசன் மற்றும் பல கழகத் தோழர்கள் கலந்து கொண்டனர்.

### சேத்தியா தோப்பு

சேத்தியாதோப்பு கடை வீதியில் அண்ணா நினைவு நாள் நடந்தது ப வைத்திய நாதசாமி தலைமையில் பழனி, வீரப்பிள்ளை எஸ். எஸ் குமார் நடராஜன், பாண்டுரங்கன், கணேசன் மனோகரன், கோபால், வீரப்பிள்ளை ஆகியோர் பேசினர்

### கோவை

கோவை ஸ்டேட் பாங்க் சாலையில் உள்ள ஆர். எச். ஆர். பில்டிங்கிலிருந்து பேரறிஞர் அண்ணா நினைவுநாள் அமைதி ஊர்வலம் நடந்தது. கோவைமாவட்ட பஞ்சாலை அண்ணா தொழிலாளர் சங்க பொதுச்செயலாளர் நா கருப்பசாமி தலைமையில், சீதாதேவி கிருஷ்ணசாமி எம். எல். சி, பி எஸ். ராமலிங்கம் எம். பி கே. பிரபாகரன், ஏ. என் சாமி இரா. கோவை மூத்து மற்றும்பலர் கலந்து கொண்டனர்.



### புதுவை

புதுவையில் மாநில கழக அமைப்பாளர் சி. என். பார்த்தசாரதி தலைமையில் நடந்த பேரறிஞர் அண்ணா நினைவு நாள் அமைதி ஊர்வலத்தில் எஸ். ராமசாமி, பழனிநாதன், சூசைராஜ், இரா. பி. ஜோசப், பா. மணிமாறன். கோவிந்தராஜ் ராதா பெருமாள், சின்னராஜ். கி. சண்முகம், ராமு. கேசவன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

### புன்செய் புளியம்பட்டி

கோவை மாவட்டம் பவானி சாகர் தொகுதியைச் சேர்ந்த புன்செய் புளியம்பட்டி கிளையின் சார்பாக நடந்த பேரறிஞர் அண்ணா நினைவு நாள் அமைதி ஊர்வலத்தில், பி எஸ் ரங்கசாமி, பி ஆர். சூசை ராஜ், டி முனுசாமி ஏ பாரதியார், பி சிரகசாமி. பி, கே. கிருஷ்ணசாமி பி ஏ பாலன், முருகேசன், சந்தசாமி நடராஜ் ஆகியோர் கலந்து கொண்டனர்

### சோழவந்தான்

சோழவந்தான் தொகுதியைச்சேர்ந்த இருப்பாடி, பாலகிருஷ்ணபுரம் மேல் நாச்சிகுளம் ஆகிய இடங்களில் பேரறிஞர் அண்ணா நினைவுநாள் நடந்தது. பி, காளை. முத்து, மகாலிங்கம் தியாகராசன், ச. ப்பாஸ், வி மருதையா, நா. மணிராஜன், கோபால், சேதுராமன், நாகேந்திரன், அய்யாவு, கோ. வெள்ளையத்தா டாலுச்சாமி, வல்லவரங்கன், வே சந்திரன், கிருஷ்ணன் ஆகியோர் நினைவு நாள் கூட்டங்களில் கலந்து கொண்டனர்

### கீழவாசல்

ராமேசுவரம் கீழவாசல் 14வது வட்டக்கிளைக் கழக சார்பில் பேரறிஞர் அண்ணா நினைவுநாள் கூட்டத்தில் ஏ எஸ் எம் சேகர் தலைமையில் பா பூமிநாதன் மற்றும் பலர் பேசினர்

### பேரூர்

கோவை மாவட்டம் பேரூர் தொகுதியில் பேரறிஞர் அண்ணா நினைவு நாள் நடந்தது. தொகுதி அமைப்பாளர் பேரூர் க. சண்முக சுந்தரம், பழனிச்சாமி, காதர், சுடபிரமணி, அல்லாபக்ஸ், மற்றும் பலர் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்து அஞ்சலி செய்தனர்,

### கடலூர்

கடலூரில் நடைபெற்ற அண்ணா நினைவு நாள் ஊர்வலத்துக்கு தொகுதி அமைப்பாளர் ஏ. ரகுபதி தலைமை தாங்கினார். நகர அமைப்பாளர் ஜனார்த்தனம் முன்னிலையில் 5 ஆயிரம் தோழர்கள் மவுன ஊர்வலத்தில் கலந்துகொண்டனர் ஊர்வலம் திருப்பாபுலியூர் துணைப்பதிவாளர் அலுவலகம் அருகில் இருந்து புறப்பட்டு முக்கிய வீதிகள் வழியாக வன்னியர் பாளையம் அண்ணா சிலையருகில் வந்தடைந்தது. தோழர்கள் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தார்கள். தொகுதி துணை அமைப்பாளர் அன்பு தண்டபாணி நன்றி கூறினர்.

### சிதம்பரம்

சிதம்பரத்தில் நடந்த அண்ணா நினைவுநாள் ஊர்வலத்தில் மாவட்ட அமைப்பாளர் இரத்தின பாலகுருசாமி எம் எல் சி, தலைமையில் ஏ நடராசன், ஜி சுப்பையன், கே முருகையன், ஜி ராதா, உசுப்பூர் கோ முருகன், ராயல் கலியமூர்த்தி, பி கர்ணன் சி எஸ் ராதா, எம் சுப்ரமணியன், இராஜ சுந்தரேசன், சி வீரப்பன், கணேசன், செல்வராஜ், இராமமூர்த்தி ஆகியோர் சென்றனர்.

### மொடக்குறிச்சி

பேரறிஞர் அண்ணா நினைவுநாள் ஊர்வலம் மொடக்குறிச்சியில் நடந்தது ஊர்வல முடிவில் 2 நிமிடங்கள் மவுன அஞ்சலி செலுத்தப்பட்டது ஊர்வலத்திற்கு மு ஜெகந்நாதன் தலைமையில் ஊ நா கருப்பையன் குணசேகரன் பொ நகுப்புசாமி வ கா சுப்பண்ணன் அபூபக்கர் நாகராஜ் ஆகியோர் கலந்து கொண்டனர்.

### சாம்ராஜ் பெட்

கருநாடக மாநிலம் சாம்ராஜ்பெட் தொகுதி சார்பில் பேரறிஞர் அண்ணாவுக்கு நினைவு நாள் அஞ்சலி ஊர்வலம் நடைபெற்றது. கே. ஆர். கிருஷ்ணராஜு தலைமையில் பல்லாயிரக்கணக்கான கழகத்தோழர்களும், மன்றத்தோழர்களும் பெருமளவில் கலந்து கொண்டனர்.

### திருவல்லிக்கேணி

சென்னை 29-வது வட்டம் திருவல்லிக்கேணியில் அண்ணா சத்தியா மகளிர் மன்றத் திறப்புவிழா- பெரியார் - அண்ணா விழாக்கள் முத்தம்மா பொன்னுசாமி தலைமையில் நடந்தன.

கனகம்மாள் மன்ற பெயர்ப் பலகையை திறந்து வைத்தார். டி. வளர்மதி கழகக் கொடியேற்றினர். ஜெ. பாலன், மு. கிருஷ்ணன், ப கோபால் பா மாணிக்கம், பி. நாகபூஷணம் ஆகியோர் பேசினர்.

## தேவிகாபுரம் கூட்டுறவு பால் சங்கம் துவக்கம்

ஆரணி, பிப். 8- ஆரணி நகரை அடுத்த தேவிகாபுரம் கூட்டுறவு பால்வழங்கும் சங்கத் திறப்பு விழா 11ந்தேதி நடைபெறுகிறது.

தேவிகாபுரம் கூட்டுறவு பால் வழங்கும் சங்கத்தை காலை 9 மணிக்கு வி. அர்ச்சுனன் எம். எல். ஏ. துவக்கி வைக்கிறார் விழாவில் எம் சின்னக்குழந்தை, க. அண்ணாமலை ஆகியோரும் கலந்து கொள்கின்றனர்.

# நள்ளிரவு வரை எஸ்.டி.எஸ். அரிசி - வேட்டி வழங்கினார்

சென்னை, பிப். 8- சென்னை நகரில் சமீபத்தில் ஏற்பட்ட வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்கள் 7 ஆயிரத்து, 626 பேருக்கு அமைச்சர் எஸ். டி. எஸ். பிற்பகல் மூன்று மணி முதல் இரவு 11 மணிவரை அரிசி, புடவை, லுங்கி இவற்றை வழங்கினார்.

சென்னை கோடம்பாக்கம் 114-வட்டத்தில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு 1482 பேருக்கு தலா 50 கிலோ அரிசியும் புடவை, லுங்கிகளையும் அமைச்சர் எஸ். டி. எஸ் வழங்கினார்.

சேத்துப்பட்டு மீனம்பாள் சிவராஜ்நகரில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட 1378 பேர்களுக்கு புடவை லுங்கி, அரிசி ஆகியவற்றை அமைச்சர் எஸ். டி. எஸ். விநியோகித்தார். தியாகராயநகர் பகுதியில் 2246 பேர்களுக்கு வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி எஸ். அரிசி, புடவை, லுங்கி முதலியவற்றை வழங்கினார்.

இதேபோல சைதாப்பேட்டை பகுதியில் 2520 பேர்களுக்கு அரிசி, லுங்கி, புடவை முதலியவற்றை அமைச்சர் வழங்கினார்.

# பல்லவன் போக்குவரத்துக் கழகம் லிட்.,

## மோட்டார் வாகனங்களை பற்றிய அரசு போக்குவரத்து நிறுவனம் மேற்கொள்ளும் திட்டம்

படிவம் I

(1976-ம் ஆண்டு ஜனவரி 28ம் தேதியிட்ட உள்துறை ஜி.ஓ.எம்.எஸ். நெ. 156-ல் மாற்றியமைக்கப்பட்டபடி 1940-ம் வருட தமிழ்நாடு மோட்டார் வாகனங்கள் சட்டவிதி 294.C(1)ஐப் பார்க்கவும்)

நெம்பர் VI (3b)- 15 (d)-79

பொதுமக்களின் நலனை முன்னிட்டு அடியிற்கண்ட ஷெட்யூல் Iல் கூறப்பட்டுள்ள வழித்தடம் சம்பந்தமாக மிகத்திறமையுடனும், போதுமான அளவிலும், சிக்கனமாகவும், சாலை போக்குவரத்தில் சரியான சீரமைப்புடனும் கூடி ஒரு போக்குவரத்தை அமைக்க பேருந்துகள் அரசு போக்குவரத்து நிறுவனத்தால், அதாவது பல்லவன் போக்குவரத்துக்கழகம் லிமிடெட்டால் நடத்தப்பட வேண்டும் என்று அரசு போக்குவரத்து நிறுவனமான பல்லவன் போக்குவரத்துக்கழகம் லிமிடெட் கருதுகின்றது.

அதற்காக வேண்டி கீழே கொடுக்கப்பட்டுள்ள ஷெட்யூலின்படி அரசு போக்குவரத்து நிறுவனமான பல்லவன் போக்குவரத்துக்கழகம் லிமிடெட் ஒரு திட்டம் தயாரித்திருக்கின்றது. 1939-ம் வருடத்திய மோட்டார் வாகனங்கள் சட்டம் (மத்திய அரசு சட்டம் IV OF 1939) பிரிவு 68-C-ல் குறிப்பிட்டுள்ளபடி அத்திட்டம் பொதுமக்களின் தகவலுக்காக கீழே பிரசுரிக்கப்படுகின்றது.

### ஷெட்யூல் I

| | |
|---|---|
| எந்த பகுதி அல்லது வழித்தடத்திற்கு இத்திட்டம் வகுக்கப்படுகின்றது? | செங்கல்பட்டு பஸ் நிலையம் To பூதூர் (வழி) செங்கல்பட்டு மருத்துவக் கல்லூரி மருத்துவமனை, செங்கல்பட்டு ITI ஒட்டிவாக்கம், பி.வி. களத்தூர், அன்னூர், வல்லிபுரம் |

### ஷெட்யூல் II

| | | |
|---|---|---|
| 1. | வழித்தடம் (புறப்படும் இடம் மற்றும் முடிவடையும் இடம். இடையில் வரும் முக்கியமான இடைப் பகுதிகள் அல்லது வழித்தடத்தின் தூரம்) அதன் பகுதி, தூரத்துடன். | செங்கல்பட்டு பஸ் நிலையம் To பூதூர் (வழி) செங்கல்பட்டு மருத்துவக் கல்லூரிமருத்துவமனை, செங்கல்பட்டு ITI ஒட்டிவாக்கம், க.பி. களத்தூர், அன்னூர், வல்லிபுரம் [வழித்தடத்தின் தூரம் 22 கிலோ மீட்டர்கள்.] |
| 2. | பகுதி (எதற்காக இத்திட்டம் திட்டப்படுகிறதோ அதைப் பின்பற்றி) முனிசிபல் எல்லை அல்லது தாலுகா அல்லது மாவட்ட எல்லை இவைகளைக் குறிப்பிடவும். | ... பொருந்தாது. |
| 3. | அரசு போக்குவரத்து நிறுவனத்தால் நடத்தப்பட இருக்கும் சர்வீஸ்களின் பிரிவு (பெருநகர் டவுன் இதர சர்வீஸ்கள் சாதாரணம் மற்றும் விரைவு) | ... மோட்டார் வாகனங்கள்<br>டவுன் I (சாதாரணம்) |
| 4. | மற்றவர்களை முழுமையாக அல்லது பகுதியாக அல்லது மற்றவிதமாக ஒதுக்கிவிட்டு அரசு போக்குவரத்து நிறுவனம் ஒவ்வொரு வழித்தடத்திலும் நடத்த இருக்கும் பேருந்துகளின் அதிகபட்ச குறைந்தபட்ச எண்ணிக்கை, | ... இந்த மாநிலத்தைச் சார்ந்த அரசு போக்குவரத்து நிறுவனங்களையும் இதர மாநிலங்களுடன் செய்து கொண்ட ஒப்பந்தப்படியோ அல்லது பிறகு ஏற்படும் ஒப்பந்தப்படியோ பேருந்து நடத்தும் பிற மாநிலத்தைச் சேர்ந்த மற்றவர்கள் அல்லது அரசு போக்குவரத்து நிறுவனங்களையும் தவிர இந்த வழித்தடம் முழுவதிலும் பேருந்துகள் நடத்தும் மற்றவர்களை முழுமையாக நீக்கிவிட்டு |
| | (a) அதிகபட்ச எண்ணிக்கை | ... 8 (எட்டு) |
| | (b) குறைந்தபட்ச எண்ணிக்கை | ... 1 (ஒன்று) |
| | (c) மாதிரி (Type) | ... செமி சலூன், சிங்கிள் டெக் |
| | (d) இருக்கைகளின் எண்ணிக்கை | |
| | அதிகபட்சம் | ... 75 (எழுபத்துஐந்து) |
| | குறைநத பட்சம் | ... 50 (ஐம்பது) |
| 5. | மற்றவர்களை முழுமையாக அல்லது பகுதியாக அல்லது வேறுவிதமாகஒதுக்கிவிட்டு அரசு போக்குவரத்து நிறுவனம் நடத்த இருக்கும் அதிகபட்ச மற்றும் குறைந்தபட்ச டிரிப்புகளின் எண்ணிக்கை | ... இம்மாநிலத்தைச் சார்ந்த [illegible] போக்குவரத்து நிறுவனங்களையும் இதர [illegible] களுடன் செய்து கொண்ட ஒப்பந்தப்படி [illegible] நது நடத்தும் பிற மாநிலத்தைச் சேர்ந்த [illegible] கள் அல்லது அரசு போக்குவரத்து நிறுவன [illegible] தவிர இந்த வழித்தடம் முழுவதிலும் பேருந்துகள் நடத்தும் மற்றவர்களை முழுமையாக நீக்கிவிட்டு |
| | அதிகபட்சம் | ... 144 (நூற்று நாற்பத்துநான்கு) |
| | குறைந்தபட்சம் | ... 18 (பதினெட்டு) |
| 6. | சர்வீஸ் தடைபடாமல் நடக்கவும் மற்றும் விசேஷ சந்தர்ப்பங்களில் விடவும் ரிசர்வில் வைக்கப்பட இருக்கும் பேருந்துகளின் எண்ணிக்கை. | ... இயக்கப்பட்டு வரும் டவுன் மற்றும் வெளியூர் பேருந்துகளின் மொத்த எண்ணிக்கையில் 10-ல் ஒரு பங்கு. |
| 7. | பேருந்துகளை நிறுத்தவும் பராமரிப்பதற்கும் பழுது பார்க்கவும் செய்யப்படவிருக்கும் ஏற்பாடுகள் | ... தினசரி பராமரிப்பு செங்கல்பட்டில் நடைபெறும். பெரிய ரிப்பேர்கள் பல்லவன் போக்குவரத்துக் கழக மத்திய பணிமனை அல்லது வெளியூர் டிப்போக்கள் எதிலாவது அல்லது பிராந்திய பணிமனைகளில் செய்யப்படும். |
| 8. | பிரயாணிகளின் சவுகரியத்திற்காகவும், வசதிக்காகவும் செய்யப்படவிருக்கும் ஏற்பாடுகள். | ... பயணம் செய்யும் பிரயாணிகளுக்கு வசதியாக ரப்பர் குஷன் இருக்கைகள் கொண்ட நல்ல பேருந்துகள் விடப்படும். |
| 9. | வழித்தடங்களில் பஸ் நிறுத்துமிடங்கள், ஸ்டாண்டுகள் அமைத்தல் அங்கு பஸ்களின் கால அட்டவணை பார்வைக்கு வைத்தல் ஆகியவை பற்றி செய்யப்பட இருக்கும் ஏற்பாடுகள். | ... எல்லா முக்கிய இடங்களிலும் காத்திருக்கும் ஷெட்டுகள் மற்றும் நிழற்குடைகள் அமைக்கப்பட்டு ஆங்காங்கே கால அட்டவணைகளும் பார்வைக்காக வைக்கப்படும். |
| 10. | பயணிகளைத் தவிர மற்ற பொருட்களை ஏற்றிச் செல்ல அனுமதிக்க உத்தேசிக்கப்பட்டுள்ளதா? | ... பயணிகளையும் அவர்களது பொருள்களையும் தவிர பெர்மிட்டில் குறிக்கப்பட்டுள்ளபடி செய்திப் பத்திரிகைக் கட்டுகள், தபால் மெயில்கள், மற்றும் இதர லக்கேஜுகள் ஆகியவைகளும் ஏற்றிச் செல்லப்படும். |
| 11. | அரசு போக்குவரத்து நிறுவனம் தெரிவிக்க விரும்பும் தகவல்கள் வேறு ஏதேனும் உள்ளனவா? | ... போக்குவரத்துத் தேவைகளுக்கேற்ப ஸ்பெஷல் பஸ்கள் அவ்வப்போது விடப்படும். |

(போர்ட் ஆப் டைரக்டர்கள் உத்தரவுப்படி

R. கணேசன்,

மானேஜிங் டைரக்டர் (மாவட்டம்) பல்லவன் போக்குவரத்துக் கழகத்துக்காகவும். அதன் சார்பிலும்

இடம் : சென்னை,
தேதி : 25 ஜனவரி 1979

dipr 5809 - 79 - 7

# தமிழ்நாடு அரசு

## பொதுப்பணித்துறை

**குறுகிய கால டெண்டர் அறிவிப்பு எண்: 15 SBC-78-79 ஒப்பந்த விவரம் T.N.D.S.S-ல் மொத்த தொகை**

தமிழ்நாடு அரசு ஆளுநர் அவர்கள் சார்பில் அவருக்காக மேற்பார்வை பொறியாளர், பொதுப்பணித்துறை, பிரத்தியேக கட்டிடங்கள் வட்டம், சென்னை-600 005. அவர்களால் தமிழ் நாடு அரசின் பொதுப்பணித்துறையில் தகுதி வாய்ந்த வகுப்புகளில் பதிவு செய்து கொண்டுள்ள காண்ட்ராக்டர்களிடமிருந்து முத்திரையிட்ட டெண்டர்கள் வரவேற்கப்படுகின்றன.

| வேலையின் பெயர் | டெண்டர் குறிப்புகள் கிடைக்குமிடம் மற்றும் காலம் | டெண்டர் குறிப்பின் தொகையை சலான் ரொக்க ரசீது மூலம் செலுத்தப்படவேண்டிய நிர்வாகப்பொறியாளரின் பெயர் (வேலையின் பொறுப்பிலுள்ளவர்). |
|---|---|---|
| i. சென்னை பொது மருத்துவ மனையில் விபத்துகள் சர்வீஸ் பிளாக்கிற்கு கட்டிடம் கட்டுவதற்கான (Pile Foundation) அஸ்திவாரம் அமைத்தல் மறு டெண்டர் | மேற்பார்வை பொறியாளர் அலுவலகம் பொ. ப. ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள் சென்னை-600 005. 12-2.79 முதல் 21-2-79 வரை | நிர்வாகப் பொறியாளர் பொ. ப. து. பில்டிங் டிவிஷன் iv சென்னை-5, |
| ii. கீழ்க்காணும் அரசாங்க உயர் செகண்டரிப்பள்ளிகளில் 10+2+3 மாதிரி கல்விக்காக ஒரு வகுப்பறை. ஒரு சோதனைச் சாலைக்குரிய கட்டிடம் கட்டுதல். | 2-2-79 முதல் 14-2-79 வரை | do |
| 1. மேற்கு மாம்பலம் சென்னை நகரம் | | |
| 2. செய்யூர் செங்கல்பட்டு மாவட்டம் | do | நிர்வாகப் பொறியாளர் பொ. ப. து. பில்டிங் டிவிஷன் காஞ்சிபுரம். |
| 3. கனகம்மாசத்திரம் | do | do |
| 4. வாலாஜாபாத | do | do |

1. முடிக்கப்பட வேண்டிய காலம்: இனம் 1க்கு 2 மாதங்கள் இனம் 2ல் உள்ள எல்லா வேலைகளுக்கும் 3மாதங்கள் டேவணித் தொகை டெபாஸிட் இனம் 1க்கு 7,500. இனம் 2ல் உள்ள எல்லா வேலைகளுக்கும் ரூ. 3125; டெண்டர் பெற்றுக்கொள்வதற்கான இறுதி தேதி: இனம் 1க்கு 22-2-1979: இனம் 2ல் உள்ள ஒவ்வொரு வேலைக்கும் 15-2-1979.

2. இதர விவரங்கள், மேற்பார்வை பொறியாளர் அலுவலகம், ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள், சேப்பாக்கம், சென்னை-600 005 அவர்களிடமிருந்து 5-2-79 வரை எல்லா அலுவலக நாட்களிலும், அலுவலக நேரங்களில் பெற்றுக்கொள்ளலாம்.

மேற்பார்வை பொறியாளர்
பொதுப்பணித்துறை
ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள்
சென்னை 600 005

Dipr 1-79-23.im